

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

நந்தன - ஆவணி - 2012 - ஆகஸ்ட்

கோவிலூர் ஆண்டவர்

சீர்வளர் சீர் நாச்சியப்ப ஞான தேசிகர்

கோவிலூர் மடாலயம் - கோவிலூர் - காரை

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

நந்தன - ஆவணி - 2012 - ஆகஸ்ட்  இதழ் - 2

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனிச் சுற்றுக்கு

உ
சிவமயம்

## இறை வணக்கம்

வானவர் அசமாந் தொடர்பினால் உலகோர்
வழுத்துறும் வன்னிஜங் கரனை
வான அரதன மணிஅறு முகனை
மாசறு கொற்றவாள் இறையை
வானவர் முதுவன் பாலன வலவன்
வணங்குநல் திருநெலை மாதை
வான வரதனாம் முத்திராம ஈச
வள்ளலை வணங்கிவாழ்த் திடுவாம்.




# ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

மனிதப் பிறவி எடுத்த அனைவரும் தமக்கேற்பட்ட கடமைகளை - குல தர்மத்தைச் செய்தே ஆக வேண்டும். வடமொழியில் புருஷார்த்தம் என்பார்கள். தர்மம், அர்த்தம், காமம் மற்றும் மோட்சம் என்பார்கள். தமிழில், அறம், பொருள், இன்பம், வீடு என்று சொல்லப்பெறும் நான்கினையும் கடமையாகக் கொண்டு வாழவேண்டும்.

முதல் மூன்றும் பொருளியல் கடமை; மற்றது அருளியல் கடமை. முன்னோர்கள் சொல்லி வைத்த வண்ணம் சாத்திரங்கள் வழி, அற வழி, வாழ்க்கை நடத்திப் பொருள் ஈட்டி இன்பம் துய்த்துப்பின்னர் பிறவிப்பயனாக வீடு பேறடையும் முயற்சியைச் செய்து உய்ய வேண்டும்.

முதல் மூன்றும் உலகியலில் வாழ்வாங்கு வாழ உதவும் சாதனங்கள். நான்காவது தனக்கு உய்வு வேண்டி, பிறப்பு இறப்பினைத் தவிர்க்க வேண்டிப் பெற வேண்டிய ஞானம்.

இவற்றுக்கு அறிவு தேவை. பொருளியல் அறிவு, அருளியல் அறிவு என்ற இருவகையான அறிவும் தேவை.

உலகியலிற் பொருள் ஈட்டி வாழ்க்கையை அறவழி நடத்தத் தேவை - கல்வி கேள்வியாற் பெறப்படும் அறிவு.

உள்நோக்கி நான் யார் ? என்ற தத்துவ ஆய்வு தேவை, ஆன்மீக அறிவிற்கு அருளியல் அறிவு - ஞானத்தேடல் தேவை.

இந்த இரு விதமான அறிவையும், நம் குருநாதர் நாச்சியப்ப சுவாமிகள் வழிகாட்டலின் வண்ணம் நம் திருமடத்தில், பெறுவதற்கான வழி வகைகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

பொருளியல் வாழ்விற்குப் பயன்தரக் கல்லூரிகள் - பள்ளிகள் - கலைக்கூடங்கள் தொடர்ந்து ஏற்படுத்தப்படுகின்றன. இந்தக் கல்வியாண்டில் நம்முடைய நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி தனது சேவையைத் தொடங்கிவிடும். ஏற்கனவே, பல் தொழிற்கல்லூரி, உடற்பயிற்சிக் கல்லூரி மற்றும் மெட்ரிக் பள்ளி, தொடக்கப்பள்ளிகள் கல்விப் பணியாற்றி வருகின்றன. ஆன்மீகத்திலும் இந்த ஆண்டு சில புதிய முயற்சிகள் தொடங்கப்பட்டுள்ளன. நம் திருமடத்தின் சார்பாக மாத இதழ் 'திருநெல்லை' ஜுலை 22 (ஞாயிற்றுக்கிழமை) ஆடிப்பூரத்தன்று திருப்பனந்தாள் காசித் திருமடத்தின் இணை அதிபர் ஸ்ரீமத் சுந்தர மூர்த்தித்தம்பிரான் அவர்களால் வெளியிடப்பெற்றது. பேரா.முனைவர். பழ. முத்தப்பன் வாழ்த்துரை வழங்க, பேரா.முனைவர். கரு.முத்தையா ஆய்வுரை வழங்கினார்.

ஆடிப்பூரத்திருவிழா மங்கலத்தை ஒட்டி நாம் கீதாச்சாரத் தாலாட்டு நூலை முறைப்படி பாடம் சொல்ல ஆரம்பித்து ஆறு நாள்கள் பாடம் சொல்லி நிறைவு செய்தோம்.

இது ஏறக்குறைய 41 ஆண்டுகளுக்குப்பின் நடந்த நல்ல முயற்சி. நம் திருமடத்தில் எட்டாவது ஆதீனக்கர்த்தராக அருள்ஆட்சி செய்த ஸ்ரீமத் சோமசுந்தர ஞானதேசிகருக்குப்பின் ஆதீனகர்த்தர் கோவிலூர் மரபு வேதாந்தப் பாடம் நடத்துவது தற்போது தொடங்கப்பட்டு உள்ளது. ஜுலை 13 வெள்ளிக்கிழமை தொடங்கி 14, 15, 16, 23, 24

ஆக ஆறு நாள்களில் கீதாச்சாரத் தாலாட்டு நூலை நடத்தி நிறைவு செய்தோம். தொடர்ந்து ஆகஸ்ட் 17 முதல் வாரந்தோறும் வெள்ளி சனி ஞாயிறு ஆகிய கிழமைகளில் சசி வண்ண போதம் நூலைப் பாடமாக மாலை 6 மணி முதல் 7 மணி வரை நடத்த உள்ளோம். ஆர்வம் உள்ளவர்கள் கலந்து கொள்ளலாம்.

குரு முதல்வர் கோவிலூர் ஆண்டவர், திருநெல்லை அருளால் மாத இதழும் வேதாந்தப் பாடமும் தொடர்ந்து நடத்தப்பட்டு நாம் உட்பட எல்லோர்க்கும் பயன் தர வேண்டும். எல்லோரும் குருவருளும் திருவருளும் பெற வேண்டும்.

# திருநெல்லை

## தோற்றுவாய்

நம்முடைய 12ஆம் ஆதீனகர்த்தராக எழுந்தருளி அருளாட்சி செய்து அண்மையில் முத்தியடைந்த சீர் வளர் சீர் நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள் மனத்திலே நெடுநாள்களாக ஓர் எண்ணம் கருக்கொண்டது. அந்த எண்ணமானது அடுத்த மடாதிபதியாகப் பொறுப்பேற்று அருளாட்சி செய்துவரும் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிகர் காலத்தில் உருவாகி அருள்மிகு திருநெல்லை என்ற பெயர் தாங்கி வெளி வருகின்ற 2ஆம் வேதாந்த இதழ் இதுவாகும்.

கோவிற் கலைகளான நாதஸ்வரம், சிற்பம், தேர், வாகனம் முதலான கலைகளை வளர்ப்பதோடு பதிப்புத் துறையிலும், தமிழ்வளர்ச்சிப் பணியிலும், தன்னை ஈடுபடுத்திக் கொண்டு மேலும் கலை அறிவியற்கல்லூரி, உடற்கல்விக் கல்லூரி, நுண்கலைக் கல்லூரி என்று பல்வகையாக விரிந்த அளவில் கோவிலூர் திகழ்கின்றது. முத்தராகிய சீர் வளர் சீர் நாச்சியப்ப ஞான தேசிகர் தம்முடைய தனிப்பட்ட உழைப்பினால் ஈட்டிய பொருள் வளம் முழுவதனையும் கோவிலூர் ஆதீன வளர்ச்சிக்கென அளித்தவர்.

கோவிலூர் மடலாய வரலாற்றில் இவருடைய ஆட்சிக் காலம் பொற்காலம் என்பதில் ஐயம் இல்லை. இனி வரும்காலங்களில் திருமடத்தின் பல்வேறு சிறப்புக்கள் தொடர்ந்து வெளிவர உள்ளன. ஆன்மீக அன்பர்களின் ஆக்கத்தையும் ஊக்கத்தையும் வேண்டுவதோடு எம்மை இப்பணியில் ஈடுபடுத்திய இன்றைய ஆதீனகர்த்தர் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிகருக்கு எங்கள் நன்றி மலர்களைக் காணிக்கை ஆக்குகின்றோம்.

- ஆசிரியர் குழு -

## புதிய ஆதீனகர்த்தர்
## சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிகர்

கோவிலூர் மடாலயத்தின் புதிய ஆதீனகர்த்தராக, சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிகர் அவர்கள் பொறுப்பேற்றிருக்கின்றார்கள். காரைக்குடியில் புகழ்பெற்ற குடும்பமான மெ.மெ. குடும்பத்தில் பிறந்தவர். பிள்ளையார்பட்டிக் கோவிலைச் சார்ந்தவர். காரைக்குடியில் உள்ள அழகப்பர் கலைக் கல்லூரியில் நிலவியல் துறையில் இளங்கலைப் பட்டம் பெற்றுப் பலகல்லூரிகளில் பேராசிரியராகப் பணியாற்றிப் பின்னாளில் கோவிலூர் மடாலயத்தில் மேலாளர் பொறுப்போடு மடாலயத்திலே உள்ள பலகல்வி நிறுவனங்களின் செயலராகவும் பணியாற்றியவர். சீர் வளர் சீர் நாச்சியப்ப ஞான தேசிகரின் விருப்ப ஆவணத்தின்படி இன்று பதின்மூன்றாம் பட்டமாகப் பொறுப்பேற்று அருளாட்சி செய்து வருகிறார். பள்ளியிலும் கல்லூரியிலும் பயிலும் பொழுதே சொற்பயிற்சி மன்றங்களில் பங்கு பெற்றவர். நல்ல தமிழ்க் கவிஞரும் ஆவார். பழனிப் பாதயாத்திரையில் அனைவரும் பாடுகின்ற 'ஆடுக ஊஞ்சல் ஆடுகவே' என்ற பாடல் இவர்கள் இயற்றியதே. திருநெல்லை என்ற ஆன்மீகத் திங்கள் இதழும் புதிய அறிவியல் கலைக்கல்லூரியும் இவரின் பெருமுயற்சியால் உண்டானவையே.

# கோவிலூர் ஆதீன கர்த்தர்கள் வரலாறு

(காப்பியக் கவிஞர் நா. மீனவன்) (தொடர்ச்சி..)

## கோவிலூர் ஆண்டவர்

**ஆண்டவர் வாசிட்ட பாடம் படிக்கத் தொடங்குதல் :**

உகந்தலிங்க தேசிகரிடம் வேதாந்த சூடாமணி கைவல்லிய நவநீதம் பஞ்சதசப் பிரகரணம் முதலான சாத்திரங்கள் அனைத்தையும் பயின்று பின்னர்ப் பெருங்காவியமான ஞான வாசிட்டம் என்ற நூலைப் பயில வேண்டும் என்ற ஆசையால் ஒரு நல்ல நாளில் குருநாதர் ஆசியுடன் பயிலத் தொடங்கினார்.

**ஆண்டவரும் அருணாசல சுவாமிகளும் :**

ஞானத்தினாற் சிறந்தவரும் அடியார்பலரின் வணக்கத்திற்கு உரியவராயும் வீரசைவராயும் விளங்கி வந்த திருநாகைக் காரோணத்தைச் சார்ந்த அருணாசல சுவாமிகள் என்பவர் புத்தூரை அடுத்துள்ள அக்கரைக் குளம் என்ற குளக்கரையில் உகந்தலிங்க தேசிகரைச் சந்தித்த பொழுது, தங்களிடம் தற்பொழுது ஞான வாசிட்டம் பயின்றுவரும் மாணாக்கரைப் பார்க்க வேண்டும் என்ற விருப்பத்தைத் தெரிவிக்க, தேசிகரும் அவ்வாறே சந்தித்து வருமாறு ஆண்டவரை அனுப்பினார். அங்குச் சென்ற ஆண்டவரைக் கண்ட அருணாசல சுவாமிகள் 'இப்பொழுது என்ன சாத்திரம் பயில்கின்றனை' என்று கேட்க ஆண்டவரும் 'அடியேன் ஞான வாசிட்டம் பயின்று வருகின்றேன் இதுவரை 60 கவிகள் கேட்டாயிற்று' என்றனர். இதுவரை என்றால் எத்தனை என்று வினவ, கதை 41 கவிகள் 1956 என்று விரைவில் சொல்ல, சோனை தன்னால் என்று இடையிலே வரும் சொல்லுடைய கவியைக் கூறுக என்றவுடன்

திங்களினும் மிகக்குளிர்ந்து செவ்விதாய்
நோயெல்லாம் தீர்க்கப் பட்ட
அங்கண்உற அருள்நோக்கம் செய்தானை
வணக்கத்தால் அருக்கி யத்தால்

துங்கஉப சாரத்தால் மந்தார
நன்மலரின் சோனை தன்னால்
சங்கரனை ஏத்தினேன் உமையையும்அப்
படிஏத்தித் தாளில் வீழ்ந்தேன்.

என்று விரைவில் சொல்லியதைக் கேட்ட சுவாமிகள் சருக்கரையை ஆண்டவர் வாயிலிட்டு அருளிக் கட்டித் தழுவி மகிழ்வோடு விடை கொடுத்தனர்.

**தேசிகர் கேட்க ஆண்டவர் கவி சொல்லல் :**

ஒருநாள் இரவில் உகந்தலிங்க தேசிகருடன் தனித்திருந்த போது ஆண்டவரை நோக்கி ஒரு கவி சொல்ல வேண்டினார். ஆண்டவரும்

உன்னும்உணர் வுக்(கு)உணர் வாய்எனக்(கு) உண்மைதந்தாய்
மன்னும்சுரு திப்பொரு ளாய்வழி காட்டி நின்றாய்
பின்னும்குரு வாய்அடைந்(து) உன்அருள் பேணவைத்தாய்
என்என்(று)ரைப் பேன்நின்கரு ணைஇருந்த வாறே.

என்று வைராக்கிய சதகக் கவியை எடுத்துரைக்கக் கேட்ட உகந்தலிங்க தேசிகர் மிக மகிழ்ந்து ஆண்டவரைத் தழுவிக் கொண்டார்.

**ஆண்டவர் ஞான வாசிட்டம் நிறைவு செய்தல் :**

இவ்வாறு இருக்கின்ற நிலையில் ஆண்டவரின் தந்தை காரைநகர் திரும்ப எண்ணினார். அப்பொழுது தமது கூட்டாளியிடத்தில் நம் பிள்ளை உகந்தலிங்க தேசிகரிடம் பாடம் கேட்டு வருவதால் பெட்டித் திறவுகோல் முதலியவற்றைக் கொடுத்தால் பொருள்களைச் செலவு செய்து விடுவான்; ஆதலால் அவனிடம் கொடாது பார்த்துக் கொள்ளுங்கள் என்று கூறிப் பயணப் பட்டார். இதனை அறிந்த ஆண்டவர் ஞான வாசிட்ட நூற் பயிற்சியை நிறைவு செய்யக் கருதி நல்ல நாள் ஒன்றைத் தேர்ந்து அதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினார்.

அவ்வாறு இருக்கையில் ஒருநாள் ஆண்டவர் குளக்கரையில் தந்த சுத்தி செய்து கொண்டிருந்த வேளை ஒரு கூலியாள் அனைத்துக்

கடைகாரர்களுக்கும் ஓலை கொண்டு வந்ததைக் கண்ட ஆண்டவர் தமது கடைக்கு ஓலை இல்லாதிருப்பதை அறிந்து தமது கடைக் கூட்டாளியின் தாயார் இறந்து விட்டதாகவும் ஆதலால் பெட்டிச் சாவியைத் தம்பியிடம் கொடுத்துவிட்டு உடன் வந்து சேர வேண்டியது என்றும் தன் தமையனார் எழுதியது போல ஓர் ஓலையை எழுதி அக்கூலியாளிடம் கொடுத்து விட்டார். கூட்டாளியான மெய்யப்ப செட்டியாரும் ஓலை வந்திருப்பதை அறிந்து படித்துப் பார்த்து மனங்கலங்கி அழுது புலம்பி ஆண்டவரிடம் பெட்டித் திறவுகோலைக் கொடுத்து விட்டு ஊருக்குப் பயணம் ஆயினர். அதன்பிறகு ஆண்டவர் தாம் எண்ணியது போல் வாசிட்ட நூற்பயிற்சி நிறைவை விருப்பம் போலச் செலவு செய்து கொண்டாட எண்ணி அளவிறந்த சாதுக்களை வரவழைத்துத் தன் குருநாதராகிய உகந்தலிங்க தேசிகரைப் பால் தயிர் கொண்டு திருமுழுக்காட்டி உயர்ந்த பட்டாடைகளை அணிவித்துப் பல அணிகலன்களை அணிவித்து மலர்களால் அருச்சித்து மிகச்சுவையான உணவை அனைவர்க்கும் அளித்து ஞான வாசிட்ட நூலிற் கூறியபடி நடத்தி முடித்தனர்.

இந்நிலையில் ஆண்டவர் கடைக் கூட்டாளி மெய்யப்ப செட்டியார் ஆண்டவரின் தந்தையைக் காணச் சென்ற பொழுது ஆண்டவரின் தமையனாரான மாயாண்டி செட்டியார் நீரேன் வந்தீர் ? எனக் கேட்கத் தாங்கள்தான் என் தாயார் இறந்து விட்டதாக ஓலை எழுதியிருந்தீர்களே என்று சொன்னார். உடனே மாயாண்டி செட்டியாரும் இதென்ன வியப்பாய் இருக்கின்றது. நான் அவ்வாறு ஓலை எழுதவில்லையே மேலும் முந்தாநாள் உமது தாயார் நெல் வாங்கும் பொருட்டு முப்பத்தைந்து ரூபாய்கள் வாங்கிச் சென்றார் என்று கூறி ஆண்டவர் வாசிட்ட நூல் நிறைவு செய்ய எத்தனை நாள் இருக்கின்றது? ஆண்டவர் ஏதேனும் செலவுக்குக் கேட்டனரோ ? என்று வினவ மெய்யப்ப செட்டியாரும் நான் அங்கிருந்து வரும் போது வாசிட்ட நூல் நிறைவு செய்ய ஆறு நாள்களே இருந்தன. ஆண்டவர் என்னிடம் ஏதும் பொருள் கேட்கவில்லை. ஓலையைக் கண்டதும் விரைவாக வந்து விட்டேன்

என்றார். அதனைக் கேட்ட மாயாண்டி செட்டியார் சரி ஆண்டவருடைய வேலையே இது. இனி நாம் இங்கிருந்து போனாலும் வாசிட்டம் நிறைவாகி இரண்டு நாள்கள் ஆகியிருக்கும். சரி எல்லாம் நல்லதுக்குத்தான் என்று சொல்லி மீண்டும் கூட்டாளியை ஊருக்கு அனுப்பி வைத்தனர்.

**ஆண்டவர் காரைமாநகர் வருகை :**

ஆண்டவரும் வாசிட்டம் நிறைவு செய்தபின் தம் குருவினிடத்தும் குருபத்தினியாரிடத்தும் விடை பெற்றுக் கொண்டு புறப்படும்போது குருபத்தினியாரும் ஆண்டவரை நோக்கித் தம் வீட்டில் வளர்க்கும் பொருட்டு இரண்டு மயிற் குஞ்சுகளைப் பிடித்துத் தர வேண்டும் என்று சொல்ல ஆண்டவரும் அவ்வாறே செய்வதாகக் கூறி விட்டு நல்லான் செட்டியாருடன் காரைக்குடி நகருக்குத் திரும்பினார்.

**ஆண்டவரைத் தேடி வந்த மாணாக்கர்கள் :**

ஆண்டவர் வழக்கம் போல, காரைக்குடி மடத்தில் இருந்து வந்த பொழுது அவருடைய இளவயது நண்பரான சாத்தப்பர் நல்லான் செட்டியார் இருவரும் அவரைச் சரணடைந்தார்கள். அவர்களுக்கு ஞானோபதேசம் செய்து வந்தார் ஆண்டவர். அப்பொழுது மதுரையில் இருந்து ஆண்டவரைத் தேடிப் பால சுவாமிகள் என்ற தவசி ஞானப் பயிற்சி பெற வந்தார். பள்ளத்தூரைச் சார்ந்த முத்து வீரப்பய்யா என்பவரும் ஆண்டவரிடம் ஞானோபதேசம் கேட்டு வந்தார். பின்னர் கல்லல் வெள்ளையப்ப அய்யா என்பவரும் வந்து சேர்ந்தார். இது போலவே பற்பல அடியார்களும் ஆண்டவரைச் சரணடைந்தனர். தம் அடியவர் குழாத்துடன் காரைநகர்க் கொப்புடையாளைத் தினமும் வணங்கி வந்தார் ஆண்டவர். அப்பொழுது அம்மையின் மேல் பல கவிகளை இயற்றினார். அவ்வாறே அரியக்குடி என்னும் தென்திருப்பதியில் உள்ள திருவேங்கடத்தானையும் வணங்கிப் பாசுரங்களை இயற்றினார்.

(தொடரும்)

# கோவிலூர் வேதாந்த மடம்

பாண்டிய நாட்டின் சிவத்தலங்களில் சிறந்த ஒன்றாக விளங்குவது கோவிலூர். 18 ஆம் நூற்றாண்டு வரை கழனி, கழனி நகர், சமிவனம், வீரபாண்டியபுரம் எனப்பல பெயர்களில் விளங்கியது.

19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் காரைக்குடியைச் சார்ந்தவரும், பின்னாளில் கோவிலூர் ஆண்டவர் என்று அழைக்கப் பெற்றவரும், நகரத்தார் குலம் சார்ந்த பிள்ளையார்பட்டிக் கோவில் புள்ளியானவரும் ஆன முத்துராமலிங்கம் என்பவர் கழனிநகர் வந்த பொழுது அம்பிகையால் ஆட்கொள்ளப் பெற்று, கூரைக் கோவிலாய்ச் சிதிலமடைந்து இருந்த ஆலயத்தைக் கற்றளியாக்க விரும்பித் திருப்பணியை மேற்கொண்டு, நகரத்தார் பலர் உதவியுடன் கற்றளியாக்கி ஆலயத்தைச் சுற்றி மடங்கள், சத்திரங்கள், நந்தனவனங்கள் எனப் பலவற்றை உண்டாக்கினார்.

கடந்த 200 ஆண்டுகளுக்கும் மேலாக நகரத்தார்களே ஆதீனகர்த்தர்களாக இருந்துவரும் ஒரே வேதாந்த மடம் இதுவே. வேதாந்தத்தைத் தமிழில் போதிக்கும் முயற்சியை மேற்கொண்டு அதற்கென 14 சாத்திரங்களை ஏற்படுத்தி வேதாந்தப் பணியோடு சிவாலயப் பணிகளையும் இம்மடாலய ஆதீனகர்த்தர்கள் நகரத்தார் துணையுடன் சிறப்புற நடத்தி வந்துள்ளனர். இங்கு 96 ஊர் நகரத்தார்கள் ஒன்றுகூடிப் பல தீர்மானங்களை நிறைவேற்றி உள்ளனர். இங்குப் பாடமாக நடத்திவரும் வேதாந்த நூல்களின் பட்டியல் கீழே தரப்பட்டுள்ளது. (நூல்கள் 16, பகவத் கீதை, ஈசுவர கீதை, பிரம்மகீதை என்று மூன்று நூல்களையும் ஒன்றாக்கிக் கீதைத் திரயம் என்பதாகவும் கூறுவர்)

## 16 வேதாந்த சாத்திரங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | நானா சீவவாதக் கட்டளை | - | சேஷாத்திரி சுவாமிகள் |
| 2. | கீதாசாரத் தாலாட்டு | - | திருவேங்கடநாதர் |
| 3. | சசிவன்ன போதம் | - | எறும்பூதூர் தத்துவராய சுவாமிகள் |
| 4. | மகாராசா துறவு | - | விருத்தாசலம் குமாரதேவர் |
| 5. | வைராக்கிய சதகம் | - | பேரூர் சாந்தலிங்க அடிகள் |
| 6. | வைராக்கிய தீபம் | - | பேரூர் சாந்தலிங்க அடிகள் |
| 7. | இலட்சணா விருத்தி | - | கருணாநிதி சுவாமிகள் |
| 8. | அஞ்ஞவதைப் பரணி | - | எறும்பூதூர் தத்துவராய சுவாமிகள் |
| 9. | வேதாந்த சூடாமணி | - | துறைமங்கலம் சிவப்பிரகாசர் |
| 10. | விவேக சூடாமணி | - | திருவிடைமருதூர் உலகநாதர் |
| 11. | பஞ்சதசி | - | நித்தியானந்த சுவாமிகள் (தமிழ்வடிவம் - வீர. சுப்பையா சுவாமிகள்) |
| 12. | கைவல்ய நவநீதம் | - | நன்னிலம் தாண்டவராயர் |
| 13. | ஈசுவர கீதை | - | எறும்பூதூர் தத்துவராய சுவாமிகள் |
| 14. | பகவத் கீதை | - | பட்டனாரின் தமிழ் வடிவம் |
| 15. | பிரம்ம கீதை | - | எறும்பூதூர் தத்துவராய சுவாமிகள் |
| 16. | ஞான வாசிட்டம் | - | வீரை ஆளவந்தாரின் தமிழ் வடிவம் |

இவ்வேதாந்த நூல்களில் சில எளிய உரைகளுடன் இம்மடாலயத்தில் அச்சாகி வந்துள்ளன. இன்னும் சில நூல்கள் அச்சில் வரவுள்ளன. இவ்வேதாந்த மடம் வேதாந்தப் பணியிலும், சிவாலயப் பணியிலும், தமிழ்ப்பணியிலும் ஈடுபட்டு உலகப் புகழ்பெற்ற மடமாக விளங்கி வருவது குறிப்பிடத் தக்கது.

## கோவிலூர் ஆதீனகர்த்தர்கள்

1. சீர் வளர் சீர் முத்திராமலிங்க ஆண்டவர் - குரு முதல்வர் (காரைக்குடி) 1818 - 1847
2. சீர் வளர் சீர் அருணாசல ஞான தேசிகர் (எ) துறவாண்டவர் (தேவகோட்டை) 1847 - 1849
3. சீர் வளர் சீர் சிதம்பர ஞான தேசிகர் (எ) கருணாநிதி சுவாமிகள் (தேவகோட்டை) 1849 - 1876
4. சீர் வளர் சீர் இராமசாமி ஞான தேசிகர் (காரைக்குடி) 1876 - 1883
5. சீர் வளர் சீர் வீரசேகர ஞான தேசிகர் (எ) திருக்களர் ஆண்டவர் (புதுவயல்) 1883 - 1911
6. சீர் வளர் சீர் அண்ணாமலை ஞான தேசிகர் (தேனிபட்டி) 1911 - 1919
7. சீர் வளர் சீர் மகாதேவ ஞான தேசிகர் (தேவகோட்டை) 1919 - 1946
8. சீர் வளர் சீர் சோமசுந்தர ஞான தேசிகர் (காரைக்குடி) 1946 - 1971
9. சீர் வளர் சீர் இராமநாத ஞான தேசிகர் (காரைக்குடி) 1971 - 1982
10. சீர் வளர் சீர் இராமநாத ஞான தேசிகர் (அரிமளம்) 1982 - 1986
11. சீர் வளர் சீர் காசிவிசுவநாத தேசிகர் (பள்ளத்தூர்) 1986 - 1995
12. சீர் வளர் சீர் நாச்சியப்ப ஞான தேசிகர் (காரைக்குடி) 1995 - 2011
13. சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிகர் (காரைக்குடி) 2011 முதல்

# கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

(முனைவர் நா. வள்ளி)

## பாயிரம்

நூலுக்கு முன்னுரையாக அமைவது பாயிரமாகும். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை கோயிலூர்ப் புராணத்தின் பாயிரத்தை வன்னி விநாயகர் வணக்கத்துடன் தொடங்குகிறார். தொடர்ந்து வன்னிவனம் என்னும் கோயிலூரில் எழுந்தருளி அருள்பாலிக்கும் கொற்றவாளீசர் போற்றப்படுகிறார். இக்கனகமாகிய பூமியை அரும்பச் செய்து, மலர்த்தி, பிறகு குவியச் செய்து அதாவது படைத்தல், காத்தல், ஒடுக்குதல் என்ற முத்தொழிலையும் நடாத்துகின்ற கொற்றவாளீசர் என்றும் ஆன்றோர்கள் சொல் மாலையால் துதிக்கின்ற கொற்றவாளீசர் என்றும் கொற்றவாளீசரின் புகழ் பேசப்படுகின்றது.

அடுத்து, கொற்றவாளீசுவரரின் ஒருபாகம் அகலாத நெல்லைநாயகியைப் பரவுகிறார் மீனாட்சிசுந்தரம் பிள்ளை. ஓரறிவு முதலாக அனைத்துயிர்களையும் காக்கின்றவளும் அறிவுமயமானவளும் ஆகிய நெல்லை நாயகியின் மலர்த்தாள் நினைந்து வாழ்வாம் என்று போற்றுகிறார்.

மேலும் அங்கு எழுந்தருளி அருள்பாலிக்கும் கைலாய நாதரைக் குறிப்பிடுகையில், கோயிலூரின் தன்னிகரில்லாப் பெருமைதனை உணர்ந்தோ, மாதவர் சங்கமம் நிறைந்திருப்பதைத் தேர்ந்தோ, கழனியம்பதியைக் கைலாயம் என்று நினைத்தோ இங்கு எழுந்தருளியிருக்கிறார் என்று தலத்தின் பெருமையைக் குறிப்பிட்டு மேற்கூறிய காரணங்களால் வன்னி வனத்திடை எழுந்தருளியுள்ள கைலாயநாதர் பதம் வணங்கி, மகிழ்வோம் என்கிறது கோயிலூர்ப்புராணம். தொடர்ந்து, உலகமக்களின் அறியாமையைக் கெடுத்து, சுபாநுபவப் பொலிவு நல்குகின்ற நித்தியகல்யாணி வணக்கம் இடம்பெறுகிறது.

அன்னமய கோசம், பிராணமய கோசம், ஆனந்தமய கோசம் என்ற மூன்று உடம்புகளால் ஆகிய உயிர்கள் ஆனந்தமான தடங்கைகூப்பி வணங்கும் வண்ணம் கோலமணி மன்றில் ஆடுகின்ற அற்புதக்கூத்தனின் வணக்கம் அடுத்துச் சொல்லப்படுகிறது. தொடர்ந்து சிவகாமி சுந்தரி வணக்கமும், தென்முகக் கடவுள், பைரவக் கடவுள், வன்னி விநாயகர், குமாரக் கடவுள், திருநந்தித் தேவர் வணக்கமும் சொல்லப்படுகின்றன.

கடவுளர் வணக்கத்தை அடுத்து, அகத்தியமுனி, சைவ சமயக்குரவர் நால்வர், சண்டீசப் பிள்ளையார், செயற்கரிய செயல் செய்த அறுபத்துமூன்று நாயன்மார்கள், பஞ்சாக்கர தேசிகர் ஆகியோருக்கு வணக்கம் சொல்லப்படுகின்றது.

அடுத்து மகாவித்துவான் தம் குருவாகிய துறைசை அம்பலவாண தேசிகரை வணங்குகிறார்.

அதைத்தொடர்ந்து, 'கொற்றவாளீசர் கோயில் திருப்பணி செய்தவர்கள், செய்ய இருப்பவர்கள் என அனைவரையும் வணங்குகிறேன்' என்று கூறும் பிள்ளையவர்கள் பின்வருமாறு பாடுகிறார்.

"கொற்றவாளீசற்கு ஆலயம் விமானம் கோபுரம் மண்டபம் ஆதி
முற்ற ஆர்வத்தில் புரிந்தவர் புரிவோர் முனிவரும் விழாச் சிறப்பெடுப்போர்
செற்ற பல்லுபசாரங்களும் பரிவாற் செய்பவர் பிற விரும்புநரும்
முற்றவர் அவர்கள் யாவராயினும் யாம் உண்மையிற் போற்றுதும் உவந்தே"

இச்செய்யுளைப் படிக்கும்போது ஒரு வரலாற்றுச் செய்தி நினைவுக்கு வருகிறது.

தென்காசிக் கோயிலைக் கட்டிய பராக்கிரம பாண்டியனின் கல்வெட்டுக்கள் பாடல்வடிவில் அக்கோயிலில் காணப்படுகின்றன. அவனே கூறுவதுபோல அக்கல்வெட்டுக்கள் அமைந்துள்ளன. 'சேலேறிய வயல் தென்காசி ஆலயம் தெய்வச் செயலாலே சமைந்தது.

ஈங்கு என் செயல்ல' என்று இறையருளால்தான் கோயில்கட்டப்பட்டதே யொழிய இதில் தன் செயலாவது யாதொன்றுமில்லை எனப் பணிவுடன் கூறுகின்ற பராக்கிரம பாண்டியன் மேலும் கூறுகின்றான்.

"யாராயினும் இந்தத் தென்காசிமேவும் பொன்னாலயத்து
வாராததோர் குற்றம்வந்தால் அப்போதங்கு வந்ததனை
நேராகவே யொழித்துப் புரப்பார்களை நீதியுடன்
பாராரறியப் பணிந்தேன் பராக்கிரம பாண்டியனே"

என்று அமைந்துள்ளது அக்கல்வெட்டு. தென்காசிக் கோயிலுக்குப் பின்னாளில் ஏதாவது திருப்பணி செய்ய வேண்டிய நிலை வருமானால், அப்போது அந்தத் திருப்பணியைச் செய்யப்போகிறவர்களை, அப்போதைக்கு இப்போதே பாரறியப் பணிந்து வணங்குகின்றேன் என்று கூறுகின்றான் பாண்டிய மன்னன். அதுபோலத்தான் இங்கும் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையும் கொற்றவாளீசுவரர் ஆலயத்தைத் திருப்பணி செய்தவர்கள் செய்ய இருப்பவர்கள் யாவரையும் வணங்குகின்றேன் என்கின்றார். நல்ல உள்ளங்களின் சிந்தனைகள் எல்லாக் காலங்களிலும் ஒரே மாதிரியாகத் தானே இருக்கும் !

முத்துராமலிங்க ஆண்டவரின் காலத்துக்கு முன்புவரை கோயிலூர் கழனிவாசல் என்றே அழைக்கப்பட்டது. கோவிலூர் ஆண்டவர் கொற்றவாளீசுவரர் ஆலயத்தைத் திருப்பணி செய்து, வேதாந்த மடம் நிறுவிக் கோயிலைச் சுற்றி ஊர் அமைந்தபிறகே கோயிலூர் ஆண்டவரைப்பற்றிய பாடலில் பதிவு செய்கிறார் மீனாட்சிசுந்தரம் பிள்ளை.

"மேயபெருங் கழனிநகர் கோயிலூரெனும்
பேர்மேவ இறையாலத்தை விரித்த அருட்பெரியோன்"

என்று சோதிலிங்க சொரூபமாக விளங்கும் முத்துராமலிங்கர் புகழப்படுகிறார்.

அடுத்து, துறவொழுக்கம் அனைத்தும் ஒருவடிவு

கொண்டதென விளங்கிய அருணாசல தேசிகர் வணக்கம் கூறப்படுகிறது. "அருணாசல தேசிகனென்று உரைத்திடும் நந்தீசன் என்னும் ஒருவனை வாழ்த்திடுவோம்" என்கிறார் மகாவித்துவான். கோயிலூர் வேதாந்த மடத்தில் முத்துராமலிங்க ஆண்டவருக்கு அதிட்டானக் கோயிலெடுப்பித்து, அடுத்த பட்டமாகிய அருணாசல தேசிகரை நந்தீஸ்வரராக எழுந்தருளச் செய்தவர் மூன்றாவது பட்டமாகிய சிதம்பர தேசிகரெனும் கருணாநிதி சுவாமிகளாவார். 'அருணாசல தேசிகனென்று உரைத்திடு நந்தீசன்' என்ற அடியின் மூலம் மேற்சொன்ன செய்தி உணர்த்தப்படுகிறது.

மூன்றாவது பட்டமாகிய சிதம்பர தேசிகரெனும் கருணாநிதி சுவாமிகளின் காலத்தில் தான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் கோயிலூருக்கு வந்து, கருணாநிதி சுவாமிகளின் அன்புக் கட்டளையின்படி கோயிலூர்ப் புராணம் பாடியருளினார். இதைப் பின்வரும் பாடல்களால் அறியலாம்.

'கற்றவர் கழகநீங்காக் கழனியம்பதியின் மேவும்
கொற்றவாளீசர் தெய்வ மான்மியம் என்று கூற
லுற்ற ஆரியத்தை இன்னே மொழிபெயர்த்து உவப்புமேவப்
பற்றவாந் தமிழினாலே பாடிநீ தருதி என்றான்'

'அத்தகு பெரியோன்கூற அவன்மொழி மறுத்தற்கஞ்சி
வித்தகு ஞானமில்லேன் மேதகு கல்வியில்லேன்
உத்தம குணமுமில்லேன் ஆயினும் உறுதியோர்ந்து
சித்தமிக்கு உவப்புமேவச் செப்பிடலுற்றேன்'

கருணாநிதி சுவாமிகளின் கட்டளையை மறுத்தற்கஞ்சி, கல்வியும் ஞானமும் இல்லாதவனாகிய தான் இப்புராணத்தைப் பாடத்தொடங்கியதாகக் கூறிக் கொள்ளும் பிள்ளையவர்கள் 'பணியுமாம் என்றும் பெருமை' என்பதற்கு உதாரணமாகத் திகழ்வதைப் பார்க்கிறோம்.

பாயிரத்தின் இறுதியில் தூயவான் கங்கையைச் சுடர்த்திருமுடி மேல் அணிந்த கழனிநகர் வீற்றிருக்கும் கொற்றவாளீசரின் அடியார்களும், சான்றோர்களும் என் பாடலை ஏற்க இறையருள் துணைநிற்க வேண்டுமென்கிறார் மகாவித்துவான்.

பாயிரத்தை அடுத்து இடம்பெற்றுள்ள இரண்டு சிறப்புப்பாயிரச் செய்யுட்களில் கொற்றவாளீசர் திருப்புராணத்தை ஆக்கிய மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் சிறப்பும், முத்துராமலிங்க தேசிகரின் பேரருள்பெற்ற சிதம்பர ஞான தேசிகரின் சிறப்பும் கூறப்பட்டுள்ளன.

(தொடரும்)

## திருப்பணிகள்

அருள்மிகு திருநெல்லை உடனாய கொற்றவாளீசுவரர் திருக்கோயிலில் 1908 ஆம் ஆண்டு நிகழ்ந்த குடமுழுக்கு விழாவிற்குப் பிறகு சரியாக எழுபது ஆண்டுகளுக்குப் பின்பு 1978 ஆம் ஆண்டு திருக்குட நன்னீராட்டு விழா நடந்தது.

கோயிலில் ஏற்பட்டிருந்த பழுதுகளை முற்றும் களைந்து சீர்திருத்தி, விமானங்கள், கோபுரங்கள், திருக்குளம் உள்பட அனைத்தையும் புதுப்பித்து வண்ணம் தீட்டிச் செம்மையாக்கித் திருக்குட நீராட்டுச் செய்யப் பெற்றது. அப்போது கோவிலூர் ஆதினகர்த்தராக எழுந்தருளியிருந்த சீர் வளர் சீர் இராமநாத ஞான தேசிக சுவாமிகளின் திருவுளத்தின்படி திருப்பணிக்குழு ஒன்று அமைக்கப் பெற்றது. இத்திருப்பணிக்கு நகரத்தார்கள் பலரும் ஆர்வங்கொண்டு உபயம் செய்தார்கள்.

இத்திருக்கோயிலின் பரம்பரை அறங்காவலர்களான சிவகங்கை மன்னர் ஸ்ரீ.து. கார்த்திகேய வேங்கடாசலபதி ராஜா அவர்களின் அனுமதியுடன் 21.4.1978 வெள்ளிக்கிழமை அன்று காலை 7.51 மணிக்குமேல் 8.07 மணி அளவில் திருக்குட நன்னீராட்டு விழா நிகழ்ந்தது.

# கோவிலூர் மடாலய நிகழ்வுகள்

## நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி - கட்டடத் திறப்பு விழா:

நந்தன ஆண்டு ஆனித் திங்கள் 29 ஆம் நாள் முதல் ஆடித் திங்கள் 10 ஆம் நாள் வரை கோவிலூர் திருநெல்லை உடனமர் கொற்றவாளீசர் ஆடிப்பூரத் திருவிழா ஆதீனச் சார்பிலும் சிவகங்கை சமஸ்தானச் சார்பிலும் சிறப்புற நடைபெற்றது.

21.07.2012 ஆம் நாள் மாலை 6 மணியளவில் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் கட்டடத் திறப்பு விழா கோவிலூர் ஆண்டவர் திருமண மண்டபத்தில் சிறப்புடன் நடைபெற்றது. தமிழ்த்தாய் வாழ்த்தின்பின் தவத்திரு நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி முதல்வர் பேரா.முனைவர்.குமரப்பன் வரவேற்புரை வழங்கினார். சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிகர் அவர்கள் தம் தலைமையுரையில் தவத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் கனவை நனவாக்குவதே தம்முடைய குறிக்கோள் என்றும் அவருடைய ஞானவழிகாட்டுதலின் பேரில் இம்மடாலயம் எளியவர்கள் குறைந்த கட்டணத்தில் உயர்ந்த கல்வி பெற உதவுவதே குறிக்கோள் என்றும் பேசினார்கள்.

புதுதில்லி அனைத்திந்திய மின்சாரம் பெட்ரோலியம் மற்றும் இயற்கை எரிவாயு மேல்முறையீட்டுத் தீர்ப்பாயத் தலைவரும் மேனாள் நீதியரசருமான மாண்பமை எம். கற்பக விநாயகம் அவர்கள் கால்கோள் நாட்டிச் சிறப்புரை நிகழ்த்தினார். மாணாக்கர்களின் இன்றைய நிலை, ஆசிரியர்களுக்கு உள்ள இடர்ப்பாடுகள், செட்டிநாட்டவரின் கல்வி அறக் கொடைகள், பலருடைய வாழ்க்கை ஏற்றமுற உதவிய அழகப்ப வள்ளலின் கொடைத்திறம், மடாலயக் கல்வித் திருப்பணிச் சிறப்பு ஆகியன குறித்துச் சிறப்புறப் பேசினார்.

அழகப்பா பல்கலையின் ஆட்சிக் குழுவில் ஒருவரும், வள்ளல் அழகப்பரின் திருமகளாரும், அழகப்பர் அறநிலையின் தலைவரும், பலகல்விக் கூடங்களின் பொறுப்பில் உள்ளவருமான, திருமதி

உமையாள் இராமநாதன் அவர்கள் கோவிலூரின் கல்விப் பணி தொடர வேண்டுமென வாழ்த்திப் பேசினார். அ.மு.மு. அறக்கட்டளையின் அறங்காவலர் திரு.எம்.வி. சுப்பையா செட்டியார் அவர்கள் செட்டிநாட்டாரின் தொழில் சிறப்பையும் இயற்றி ஈட்டிக் காக்கும் திறத்தையும் தருமத்திற்கு என்று தம் சம்பாத்தியத்தில் ஒருபகுதியை ஒதுக்கி வைக்கும் நற்பண்பினையும் பற்றிச் சிறப்பாகப் பேசி இம்மடாலயக் கல்வி நிறுவனங்கள் சிறப்படைய வாழ்த்திப் பேசினார்.

அடுத்ததாகக் கல்கண்டு இதழின் ஆசிரியரும் குமுதம் இதழின் துணை ஆசிரியருமான லேனா தமிழ்வாணன் அவர்கள் நம்முடைய செட்டிநாட்டுக் கலாச்சாரச் சிறப்பினையும் தாம் வெளிநாடு சென்ற போது அங்கிருந்த செட்டிநாட்டு மக்கள் நம்முடைய கலாச்சாரத்தைக் காத்துவரும் நிலைமையினையும கூறி, இன்று கல்வி நிலையங்கள் வணிக நிலையங்களாக மாறிவரும் அவலத்தை மாற்றி எளியவர் குறைந்த செலவில் சிறந்த கல்வியைப் பெற வேண்டுமென்ற குறிக்கோளுடன் ஆன்மீகப் பாதையில் ஒரு புதிய வழிகாட்டுதலை உருவாக்கிய தவத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் தீர்க்க தரிசனத்தைப் பாராட்டி வாழ்த்திப் பேசினார்.

நிறைவாகக் கல்லூரியின் ஆங்கிலத் துறைத் தலைவர் திரு. பாலச்சந்திரன் நன்றியுரை வழங்கத் தேசிய இசையுடன் விழா இனிதே நிறைவடைந்தது. உள்ளூர்ப் பிரமுகர்களும், சான்றோர் பெருமக்கள் பலரும் விழாவில் திரளாகக் கலந்து கொண்டனர். அனைவருக்கும் இரவு விருந்து ஆதீனச் சார்பில் சிறப்பாக அளிக்கப் பெற்றது.

## திருநெல்லை இதழ் வெளியீட்டு விழா

நந்தன ஆண்டு ஆடித்திங்கள் 7 ஆம் நாள் (22.07.2012) ஞாயிறு மாலை 6 மணியளவில் கோவிலூர் ஆதீனச் சார்பில் திருநெல்லை ஆன்மீகத் திங்கள் இதழின் முதல் இதழ் வெளியீட்டு விழா, கோவிலூர் மடாலயத்தின் அலங்கார மண்டபத்தில் சிறப்புற நடந்தேறியது.

திருமுறை வித்தகர், ஆதீன ஓதுவார் திருக்களர் இரத்தின சபாபதி தேசிகர் இறைவணக்கம் பாடினார். திருநெல்லை இதழின் ஆசிரியர் குழுவில் ஒருவரான காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர் நா. மீனவன் ஆதீனச் சார்பில் அனைவரையும் வரவேற்றார். முதல் இதழை வெளியிட எழுந்தருளிய திருப்பனந்தாள் இளைய ஆதீனகர்த்தர் சீர் வளர் சீர் சுந்தரமூர்த்தித் தம்பிரான் சுவாமிகளைப் பற்றியும் திருப்பனந்தாள் ஆதீனச் சிறப்பினைப் பற்றியும் கவிஞர் மீனவன் எடுத்துக் கூறினார். ஆதீனகர்த்தர் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிகர் அவர்கள் தம்முடைய உரையில் கோவிலூர் ஆதீனப் பணிகள் பற்றியும், கோயிற் கலைகளின் மேலும் கல்விப் பணிகளின் மேலும் சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகள் கொண்டிருந்த ஈடுபாட்டைக் கூறி, அவர்கள் அருளாட்சிக் காலம் கோவிலூரின் பொற்காலம் என்றும் குறிப்பிட்டதோடு ஆதீனத்தின் பணிகளும் குறிக்கோள்களும் மக்களைச் சென்றடைய உதவியாக இந்தத் திருநெல்லை இதழ் தொடங்கப் பெற்றுள்ளது என்றும் கூறி இவ்விதழின் வளர்ச்சிக்குப் பொறுப்பேற்றுள்ள ஆசிரியர் குழுவையும் பாராட்டிப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார்.

இதழை வெளியிட்டு உரை நிகழ்த்திய திருப்பனந்தாள் ஆதீனத்தின் இளைய பட்டம் சீர் வளர் சீர் சுந்தர மூர்த்தித் தம்பிரான் அவர்கள் வேதாந்தம் வேறு சித்தாந்தம் வேறு அல்ல என்றும் வேதாந்தம் என்ற மரத்தில் தோன்றிய கனியே சித்தாந்தம் என்றும் இதுபற்றிய சிந்தனை அனைவரிடத்திலும் சென்று சேர வேண்டும் என்றும் அதற்கு உதவியாக இவ்விதழ் இன்று சிறப்புடன் வெளிவருகின்றது என்றும் இவ்விதழ் வெளிவர உதவியாக இருந்த ஆதீனகர்த்தரையும் ஆசிரியர் குழாத்தையும் பாராட்டிப் பேசினார்.

முதல் இதழைப் பெற்றுக் கொண்ட திருச்சி செட்டிநாடு கலை அறிவியல் கல்லூரியின் முன்னாள் முதல்வரும், சித்தாந்த வித்தகருமான முனைவர். பேரா. முத்தப்பன் அவர்கள் உரையாற்றும் போது ஆதீனத்தையும், ஆதீனகர்த்தரையும் பாராட்டியதோடு, வேதாந்த நூல்களை எளிமைப்படுத்தி அனைவரும் புரிந்து

கொள்ளுமாறு அவற்றைத் தொடர்ந்து இதழ்களில் வெளியிட வேண்டும் என்றும் அதன் தொடக்கமாகக் கீதாசாரத் தாலாட்டு இம்முதல் இதழிலிருந்து தொடங்கியுள்ளமை பாராட்டத் தக்கது என்றும் கூறி வாழ்த்தினார்.

அடுத்து வாழ்த்துரை வழங்கிய தேவகோட்டை, சேவுகன் அண்ணாமலை கலைக் கல்லூரியின் மேனாள் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர். பேரா. முத்தையா அவர்கள் தம் வாழ்த்துரையில் இதழைப் பாராட்டிப் பேசியதோடு, மலர் மேலும் சிறப்பாக அமையப் பல ஆலோசனைகளையும் வழங்கி எளிமையாக்கப் பட்டு வெளிவரும் வேதாந்த நூல்கள் மக்களைச் சென்றடைய வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

விழா நடத்துநர் பொறுப்பிலிருந்த காப்பியக் கவிஞர் நா. மீனவன், 12 வேதாந்த நூல்கள் தம்மால் எளிமைப் படுத்தப் பெற்றுக் கோவிலூர் ஆதீனவெளியீடாக வெளிவர உள்ளன என்றும், இதுவரை நான்கு நூல்கள் வெளிவந்து உள்ளன என்றும், அனைத்து நூல்களும் தொடர்ந்து ஆதீன இதழான திருநெல்லையில் வெளிவரும் என்றும் கூறினார். கோவிலூர் ஆதீனகர்த்தர் அந்நூல்களின் படிகளையும் மடாலயப் பதிப்பான திருமந்திர நூலையும் தலைவர், வாழ்த்துரை வழங்கியோர் அனைவருக்கும் பாராட்டி வழங்கினார்.

காரைக்குடி, இராமசாமி தமிழ்க் கல்லூரி முன்னாள் பேராசிரியரும், திருநெல்லை ஆசிரியர் குழுவில் ஒருவருமான ஆய்வுரைத் திலகம் பேரா.நா. சுப்பிரமணியன் அவர்கள் தம் முன்னோர் பாடுவார் முத்தப்ப செட்டியாருக்கும், நகரத்தார் குருபீடத் தலைவரான சேனாபதி அடிகளுக்கும் உள்ள தொடர்பைக் கூறி, அவர் காலத்தவரான ஆண்டவரால் தோற்றுவிக்கப் பெற்ற கோவிலூர் மடாலயத்தில் இருந்து வெளிவரும் திருநெல்லை இதழாசிரியர் குழுவில் தம்மையும் ஈடுபடுத்திய மெய்யப்ப ஞான தேசிகர் அவர்களுக்கும், விழாவிற்கு வந்த அனைவருக்கும் மடாலயப் பணியாளர்கள் அனைவருக்கும் நன்றி கூறிட விழா இனிது நிறைவடைந்தது.

# கீதாசாரத் தாலாட்டு

(தொடர்ச்சி)

## நூல்

1. **சீர்ஆரும் பரமார்த்த தெரிசனத்தை அருள்செய்யப்
பேர்ஆரும் தேசிகனாய்ப் பெருமானே வந்தவரோ.**

சிறப்புடைய ஆத்ம தரிசனத்தை அருச்சுனன் காணுமாறு அருள் செய்ய ஆசிரியனாக இங்கு எழுந்தருளி வந்தவர் நீர்தானோ.

2. **திருத்தேரில் சாரதியாய்ச் சேர்ந்துஇருந்தும் கீதையினால்
அருச்சுனற்கு மெய்ஞ்ஞானம் அனைத்தும் உரை செய்தவரோ.**

சிறந்ததொரு தேர்ப் பாகனாய் இருந்து கீதை என்னும் உபதேச உரைகளால் அருச்சுனனுக்கு மெய்யறிவையும் அதற்குத் தொடர்பான எல்லாவற்றையும் உரைத்தருளிய கண்ணபிரான் நீர்தானோ.

3. **செஞ்சமரில் பந்துசனம் சேதம்வரும் என்றுஇரங்கி
அஞ்சினவன் பயம்தீர்த்தே அமர்செய்யச் சொன்னவரோ.**

நேர்மையான அறப்போரில், (தர்ம யுத்தத்தில்) உறவினர்க்கு நாசம் வருமே எனப் பரிதவித்து அஞ்சிய அருச்சுனனின் அச்சத்தைத் தம் உபதேசத்தால் நீக்கிப் போர் செய்ய வழி சொன்னவர் நீர்தானோ.

4. **சுற்றம்அறில் சோகம்எனச் சொல்லினைச்சற்று அறிந்தவன்போல்
கற்றுஉணர்ந்த பேர்அதனால் கலங்கார்காண் என்றவரோ.**

“உறவினரும் பிறரும் அழிந்து போனால் எனக்குத் துக்கம் வரும் என்பதை இப்போதுதான் உணர்ந்தவனைப் போல் கூறிய அருச்சுனா ! சாத்திரங்களை நன்கு குருவின்பால் கற்றுணர்ந்த ஞானிகள், அதற்காகக் கலங்கிடார்” என உரைத்த கண்ணபிரானோ?

5. **கலங்காரோ இறப்புவரில் கற்றுஉணர்ந்த பேரேனும்**
**மலங்காமல் நான்இருக்கும் வகைஉரையும் எனவினவ**

குரு வழியாகச் சாத்திரங்களை முறையாகக் கேட்டு உணர்ந்தவர் ஞானிகளாய் இருந்தாலும் சுற்றத்தினர்க்கோ, தனக்கோ, மரணம் வரும்போது கலங்க மாட்டார்களா ? அப்படி நானும் மனம் சிதறாமல் இருக்கும் முறைகளை அடியவனுக்கு உரைத்தருள்க என்று அருச்சுனன் வினவியபோது.

6. **நீயும்நா னும்புவிமேல் நிருபர்களும் மெய்உணர்வால்**
**ஆயும்கால் பிறந்துஇறப்பது ஆர்க்கும்இலை என்றவரோ.**

"உண்மையினை ஆராய்ந்து பார்க்கும் பொழுது அருச்சுனனாகிய நீயும், இறைவனாகிய நானும், இவ்வுலகில் உள்ள முடி மன்னர்களும், பிறரும் பிறத்தல் இறத்தல் இரண்டுமே இல்லாதவர்கள்" என்று கூறியவர் நீர்தானோ?

7. **ஈங்குஎவர்க்கும் பிறந்துஇறப்பது இல்லைஎன்றீர்**
**இவ்வுலகில்**
**நீங்குபவம் ஆர்க்குஇதனை நிச்சயமாய்ச் சொல்லும்என**

இவ்வுலகில் ஜனனம் மரணம் இரண்டுமே யாருக்கும் கிடையாது என உரைத்தீர். அவ்வாறாயின் இங்கு பிறத்தலும் இறத்தலும் எவர்க்கு என்பதை உள்ளபடி உறுதியாகச் சொல்லும் என்று அருச்சுனன் கேட்க,

8. **இத்தரையில் பிறந்துஇறப்பது எடுத்தஉடற்கு**
**அடுத்தபொறி**
**நித்தியம்ஆ கியஆன்மா நின்சொரூபம் என்றவரோ.**

இத்தரையில் பிறந்து இறப்பது முன் பிறவிக் கர்மத்தின்படி உடலுக்கு நேரிடுகிறது. அப்படியானால் உன் தன்மை யாது என நீ கேட்பாயானால் உன் வடிவம் அழிவில்லாத ஆத்மாவின் வடிவமேயாகும் என்று உரைத்தவர் நீர்தானோ ?

9. **அங்கம்உயிர் இந்தியம்நான் அன்றிவேறு எனைக்காணேன்**

**இங்குயான் வேறுஉண்டேல் எனக்குஅறியப் புகலும்என**

நான் என்னும் பொருளில் அமைந்த என் வடிவம் வெளிக் காணும் உடல், உயிர், இந்திரியங்கள், உடற் கருவிகள் ஆகிய இவைகளேயன்றி, என் வடிவாக நீர் கூறிய ஆத்மாவை நான் இங்குக் காணேன். இங்கு 'நான்' என்ற சொல்லுக்குப் பொருளான ஆத்ம வடிவம் வேறு இருக்குமானால் எனக்குத் தெரியும்படி உரைத்தருள்க ! என்று அருச்சுனன் வேண்ட,

10. **மெய்உயிர்இந் தியங்கள் அல்லால் வேறுஅறியேன் என்றவனைப்**

**பையஅவை யால் அறியப் படானும்நீ என்றவரோ.**

கண்ணாற் காணப்படும் இவ்வுடல் உயிர் இந்திரியங்கள் ஆகியவைகளாக நான் விளங்குகின்றேன். இவற்றினின்றும் வேறாக என் வடிவினை நான் அறியவில்லை என்று சொன்ன அருச்சுனனை நோக்கிக் "குழந்தாய்! உயிர், இந்திரியம், உடல் இவற்றால் உணரப் படாதவனும் நீயே" என்ற கண்ணனும் நீர்தானோ ?

11. **தேகம்வேறு ஆகில்அதைச் சேர்ந்ததுஇவண் ஏதுஎனவே**

**சோகமே விளைகருமத் தொடர்ச்சியினால் என்றவரோ.**

இவ்வுடல் என் வடிவிற்கு அந்நியப் பட்டதென்றால் இவ்வுடலினைஇங்கே அவ்வாத்மா அடைந்ததெப்படி? என்று அருச்சுனன் வினவ, அதற்கு பிறப்பு, இறப்பு ஆகிய இவற்றினால் உண்டாகும் துன்பம் முற்பிறவிப் பாவ புண்ணியச் செயல்களின் தொடர்பினால் வருபவை என்று கூறியவர் நீர்தானோ ?

12. **தேகம்எடா முன்கருமச் செயல்வரும்ஆ(று) ஏதுஎனவே ஏகமா மரமும்வித்தும் எனும்முறைபோல் என்றவரோ.**

முன்பிறவியில் செய்த வினைகள் உடல் எடுப்பதற்குக் காரணம் என்றால் உடல் எடுப்பதற்கு முன்னால் புண்ணிய பாவச் செயல் எவ்வாறு வருகிறது ? என அருச்சுனன் கேட்க, மரத்தினால் விதை உண்டாகிறது. அவ்விதையினால் மரம் உண்டாகிறது. விதை காரணம். மரம் காரியம். இது முடிவின்றித் தொடரும் செயல். உடல் உண்டாவதற்கு முன் வினையும், அச்செயலுக்கு உண்டான உடலும் காரண காரியத்துடன் முடிவின்றித் தொடர்ந்து கொண்டே இருக்கும் என்று கூறியவர் நீர்தானோ ?

13. **காயமும்தா னும்பிறிதேல் கன்மம்எவர் செய்ததுஎனத் தீயஉடற்(கு) அலதுகன்மச் செயல்தனக்(கு) ஏதுஎன்றவரோ.**

இவ்வுடலும் ஆன்மாவும் வெவ்வேறாயின் நல்ல கருமம் தீயகருமம் இவைகளைச் செய்தவர் யாவர் ? என அருச்சுனன் கேட்க, அத்தீவினை, நல்வினையாகிய தொழில்கள் குற்றம் உடைய உடலுக்கேயன்றி ஆன்மாவாகிய தனக்கு எப்படி வரும் ? அவ்வாறு வருவது இல்லை எனப் பதிலளித்த கண்ணன் நீர்தானோ ?

14. **படர்கருமம் உடல்செய்யில் பலம்உறுவது ஆர்க்குஎனவே அடர்பலமும் உடற்கேயாம் அறிவார்க்கு ஏதுஎன்றவரோ.**

நன்மை தீமைகளைத் தரும் செயல்களை உடலே செய்யுமானால் அவற்றின் பாவ புண்ணியப் பலன்களை அடைதல் எவர்க்கு உரியது ? என அருச்சுனன் கேட்க, புண்ணிய பாவப் பலன்கள் உடலுக்கேயாம். அறிவு வடிவமாக இருக்கும் ஆன்மாவிற்கு எப்படி வரும்? எனப் பதிலளித்தார் கண்ணபிரானோ ?

(தொடரும்)



## நாச்சியப்ப சுவாமிகள்
## கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர்

கல்வித் துறையில் பாரம்பரியமிக்க அனுபவம் நிறைந்த கோவிலூர் மடாலயம் நடத்தும் இக்கல்லூரியில் (Subject to approval) மாணவ மாணவியர் சேர்ந்து படித்துப் பயன்பெற வேண்டுகிறோம்.

**2012-2013 ஆம் கல்வி ஆண்டுக்கான மாணவர் சேர்க்கை நடைபெறுகிறது.**

**கற்பிக்கப்பெறும் பாடப்பிரிவுகள் :**

| | |
|---|---|
| பி.எஸ்.ஸி கணிதம் | பி.எஸ்.ஸி கணினியியல் |
| பி.காம். | பி.காம் (கணினிப் பயன்பாட்டுடன்) |
| பி.பி.ஏ | பி.ஏ. ஆங்கில இலக்கியம். |

தொடர்புக்கு : **04565 - 234523, 94434 42361**

---

## நகரத்தார் திருமணச் சேவை மையம்
## கோவிலூர்

நம் சென்னைத் திருமடத்தில் கடந்த ஒன்பதாண்டுகளாக, தேவகோட்டை உயர்திரு. சோம. லெட்சுமணன் அவர்கள் வழிகாட்டுதலின் பேரில் நகரத்தார் திருமணச் சேவை மையம் நடைபெற்று வருகிறது.

அதன் சேவையை விரிவுபடுத்தி இப்போது நம் கோவிலூர் திருமடத்திலும் தன்னார்வத் தொண்டர்களின் ஆதரவால் நந்தன ஆண்டு சித்திரைத் திங்கள் பத்தாம் நாள் தொடங்கப்பெற்று நடைபெற்று வருகிறது.

வாரந்தோறும் சனிக்கிழமை காலை 10.00 மணி முதல் மாலை 5.00 மணி வரை திருமணச் சேவை நடைபெறுகிறது. அனைவரும் சேவையைப் பயன்படுத்த வேண்டுகிறோம்.

தொடர்புக்கு : **www.nagarathar.net , www. nagaratharmatrimony.com**

# சனாதன தர்ம உலகப் பல்கலைக் கழக அறநிலை நடத்தும் கல்வி நிறுவனங்கள்

1. கோவிலூர் ஆண்டவர் பாரம்பரியக் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரி

அ. திருமுறைக் கல்லூரி - 1995

ஆ. நாதஸ்வரக் கல்லூரி - 1995

இ. தவில் கல்லூரி - 1995

ஈ. கல்சிற்பக் கல்லூரி - 2004

உ. ஐம்பொன் சிலைக் கல்லூரி - 2005

(உலோகச் சிற்பம்)

ஊ. மரச்சிற்பக் கல்லூரி - 2006

2. சீர் வளர் சீர் முத்துராமலிங்க ஆண்டவர் நர்சரி மற்றும் பிரைமரி பள்ளி - 1995

3. கோவிலூர் ஆண்டவர் மாண்டிசோரி பள்ளி - 1995

4. கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி - 2007

5. கோவிலூர் ஆண்டவர் யோகா ஆராய்ச்சி மையம் - 2007

6. நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரி - 2009

7. கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளி - 2010

8. கோவிலூர் ஆண்டவர் சமுதாயக் கல்லூரி - 2010

9. நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி - 2012ல் தொடங்கப் பெற உள்ளது.